# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 11 | ஏப்ரல் 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 11 | April 10th, 2021 | Annual Subscription Rs. 100/-



## உறவுகளுடன் மட்டுமே முரண்படலாம்





நாம் எவரிடம் முரண்பட்டாலும், அவருக்கு அவர் நமக்கு வேண்டாதவர் அல்லது எதிரி என்ற தகுதியை வழங்கிவிட கூடாது.

அவர் நமக்கு வேண்டியவர் - உறவினர் என்ற அணுகுமுறையோடு முரண்படும்போது அங்கு வெறுப்பு, வன்மம் ஏற்பட வாய்ப்பு இல்லை. இந்த அணுகுமுறையில் உறவுகளோடு முரண்படுவது தவறேதும் இல்லை.

- ஸ்ரீ பகவத்

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

**ஞானியர் அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.**

உலகில் துன்பம் இல்லாமல் வாழ்வதற்கு உதவுவது உறவா? துறவா?

ஆன்மிகம் உண்மையில் எதை வலியுறுத்துகிறது?

ஆன்மிகத்தின் நோக்கம் அகத்தைப் புரிந்துகொள்வதுதான்; தன்னை அறிந்து கொள்வதுதான்.

இவ்வுலகில் உறவோடு வாழ்வதே முழுமையான வாழ்வாகும்.

தன்னை அறிந்து கொண்டவர்களால் தான் மற்றவர்களோடு பிணக்கு இல்லாமல் உறவோடு வாழ முடியும்.

எவரும் தனித்து இல்லை. அனைவரும் இயற்கையின் ஓர் அங்கம் தாம்.

இயற்கையோடும் சமுதாயத்தோடும் குடும்பத்தோடும் எப்படி இணைந்து உறவோடு வாழ வேண்டும் என்பதை புரிந்து கொள்ளவே ஆன்மிகம்.

அகத்தில் துறவோடும் புறத்தில் உறவோடும் வாழும் வாழ்வே முழுமையான வாழ்வாகும்.

அதற்கான புரிதலைதான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

உறவு என்பதே இணைப்பைதான் குறிக்கிறது. இந்த இணைப்பு இயற்கையோடும் உலகத்தோடும் இருப்பது அவசியமாகும்.

இதனால்தான் நாம் அனைவரையும் ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் என்று குறிப்பிடுகிறோம். அனைவரின் நலனிலும் அக்கறை கொண்டிருப்பதாலேயே துன்பத்தையும் துயரத்தையும் எளிதில் கடந்து விடுதலையோடு வாழும் தகுதியை கொடுக்கும் புரிதலை எந்தவொரு எதிர்பார்ப்புமின்றி அனைவருக்கும் வழங்கி வருகிறோம்.

இருப்பவர்கள் இல்லாதவர்களுக்கு கொடுத்து உதவ வேண்டும். அதுதான் உறவின் அடையாளம். அது பொருளாகவும் இருக்கலாம், புரிதலாகவும் இருக்கலாம்.

அந்த வகையில் தம்மை ஸ்ரீ பகவத் மிஷனின் குடும்ப உறுப்பினர்களாக கருதுபவர்கள்தாம் மாதந்தோறும் மிஷனின் செலவுகளில் பங்கெடுத்துக் கொண்டு புரவலர்களாக இணைந்து உதவ முன் வந்துள்ளார்கள்.

இவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அகத்தில் துறவோடும் புறத்தில் உறவோடும் வாழும் கலை அறிந்து வாழ்வோமாக...

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# உறவுகளுடன் மட்டுமே முரண்படலாம்



– ஸ்ரீ பகவத்

ஆன்மிக சாஸ்திரங்கள் இரண்டு விதமான அணுகுமுறைகளைக் கொண்டுள்ளன.

**"நாம் எவ்வாறு இருக்க வேண்டும் ?"**

–இதுதான் முதலாவது அணுகுமுறை.

**"நாம் மற்றவர்களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் ?"**

– இது இரண்டாவது அணுகுமுறை.

இவற்றையே நாம் நமது அணுகுமுறையில், **அகம்** மற்றும் **புறம்** என இரண்டாகப் பிரித்துக் கொண்டுள்ளோம்.

நமது அகத்தில் எத்தனையோ விதமான உணர்ச்சிகள் யாவும் நமது **மனோ அனுபவங்களாக** ஏற்படலாம்.

அந்த மனோ அனுபவங்கள் மகிழ்ச்சியானவையாக இருக்கலாம்; துயரமானவையாக இருக்கலாம்.

அவை நன்மையாகவோ, நியாயமானவையாகவோ அல்லது தீமையானவையாகவோ அதர்மமானவையாகவோ இருக்கலாம்.

அவை எப்படி இருந்தாலும் சரி, அவற்றை நாம் சீரமைக்கத் தேவையில்லை.

அவை யாவும் அவையாகவே வந்தவை. அவற்றை நாம் கொண்டு வரவில்லை. தாமாக வந்த அவை யாவும், தாமாகவே மறைந்துவிடும்.

ஆகவே **அகத்தைச் சீரமைக்கும் வேலை எதுவும் நமக்குக் கிடையாது.**

"நாம் எவ்வாறு இருக்க வேண்டும்" என்ற கேள்விக்கு நாம் நமது அகத்தையே எடுத்துக்கொள்கிறோம்.

தாமாக இயங்கும் இயற்கையின் இயக்கமாக நம்மை எடுத்துக்கொண்டால் போதும்.

நமது அகமே தன்னைத் தானே சமன் செய்து கொள்ளும் – சீரமைத்துக் கொள்ளும்.

ஆகவே அகம் என்னும் அந்த முதற்பகுதியில் நமக்கு எந்த வேலையும் கிடையாது – **எந்த வேலையும் கிடையாது என்பதைப் புரிந்து கொள்வதைத் தவிர.**

ஆனாலும் புறத்தை எதிர்கொள்ளும் அந்த இரண்டாவது பணி, நமக்காகக் காத்துக்கிடக்கிறது.

அதை நம்மால் தவிர்க்க முடியாது.

புறத்தை நாம் எதிர்கொள்ளும் அணுகுமுறையைத்தான் **தர்மம்** என்று சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

கால்களால் மட்டுமே நடந்து செல்லக்கூடிய இடத்தில், மோட்டார் வாகனத்தில் பயணிப்பது இடர்பாட்டையே ஏற்படுத்தும்.

பாதைகளுக்கு ஏற்றபடி பயணம் செய்வது, தேவையற்ற துன்பங்களைக் குறைக்கும்.

அகத்தைப் பொருத்தவரை புறப்படும் இடமும் கிடையாது; அடையும் இடமும் கிடையாது. அதனால் அங்கே பாதை அமைப்பது மட்டுமே பிரச்சனை.

அகத்தையும் அகத்தின் இயக்கங்களையும் நாம் முழுமையாக ஏற்றுக்கொண்டு,

**அதனைப் புறக்கணித்தால் மட்டும் போதும்.**

இவ்வாறு நாம் நமது அகத்தையும் அக இயக்கங்களையும் முழுமையாகப் புறக்கணித்து விட்டோமாயின் புற நிகழ்வுகள் அனைத்தும் சீராகிவிடுமா?

புற நிகழ்வுகள் என்பவை நமது கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டவை அல்ல.

புற நிகழ்வுகள் எத்தனையோ விதமான தன்மையில், எத்தனையோ விதமான செயல்பாடுகளுடன் அமைந்திருக்கலாம்.

சிங்கம் ஒன்றைப் பார்க்க வேண்டும், அதற்கு உணவு கொடுக்க வேண்டும் என நான் விரும்புவதாக வைத்துக் கொள்வோம்.

சிங்கத்துக்கான உணவை எடுத்துக் கொண்டு, சிங்கத்தைத் தேடி அடர்ந்த காட்டினுள் நான் நுழைகிறேன்.

அந்தக் காட்டில் சிங்கத்தையும் பார்த்து விடுகிறேன். இப்போது நான் என்னிடம் இருக்கும் உணவை சிங்கத்துக்கு ஊட்ட வேண்டும்.

அப்படி நான் உணவை ஊட்டினால் என்ன ஆகும்?

நான் எடுத்துச் சென்ற உணவைத்தான் சிங்கம் சாப்பிடும் என்று நிச்சயமாகக் கூற முடியாது.

அந்த உணவைச் சாப்பிடுவதற்கு முன்னால்

உணவை எடுத்து வந்த என்னையே கூட அது சாப்பிட்டு விடலாம்.

ஆனால் மிருகக்காட்சி சாலையில் கூண்டுகளில் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் இத்தகைய மிருகங்களை பாதுகாப்பான முறையில் அணுகி, நமது ஆசைகளை நாம் நிறைவேற்றிக் கொள்ளமுடியும்.

கட்டுப்பாடுகளற்றுக் கிடக்கும் புறச் செயல்களோடு நாம் தொடர்பு கொள்ளும்போது, அவற்றின் தாக்கம் நம் மனதிலும் எதிர்விளைவுகளை ஏற்படுத்தவே செய்யும்.

அவற்றையும் தகுந்த கூண்டுகளில் அடைத்து விட முடியுமேயானால், அவற்றையும் எளிமையான முறையில் அணுகமுடியும்.

புற நிகழ்வுகளை எவ்வாறு கூண்டுகளுக்குள் அடைத்திடுவது?

புற நிகழ்வுகளைப் பொருத்தவரை,

"என்ன செய்ய வேண்டும் - என்ன செய்யக்கூடாது?"

"எவ்வாறு செயல்பட வேண்டும் - எவ்வாறு செயல்படக்கூடாது?"

- என்பன போன்ற **முடிவுகளை** எடுத்துக் கொள்ள வேண்டும்.

அந்த **முடிவுகள்தாம்** கூண்டுகளாக இருந்து நமக்கு உதவி செய்யும்.

இரண்டு நாடுகளுக்கிடையே எல்லைகளை நிர்ணயம் செய்து கொள்வார்களேயானால் அதன் பிறகு எவரும் அடுத்த நாட்டைப் பற்றி சிந்திக்கத் தேவையில்லை.

அவர்களுடைய திட்டங்களையும் செயல்பாடுகளையும் அவர்களுடைய எல்லைகளுக்குள், சுதந்திரமாகவும் முன்னேற்றகரமானவையாகவும் வைத்துக்கொள்ள முடியும்.

அகத்தைப் பொருத்த அளவில் கூண்டுகளும் தேவையில்லை, எல்லைகளும் தேவையில்லை. அங்கு எது வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் இருந்து கொள்ளலாம். அனைத்தும் ஒன்றே; அனைத்தும் நன்றே.

அகத்தில் நமக்கு எந்த வேலையும் கிடையாது என்று அகமாகிய நம் மனதைச் சுதந்திரமாக விட்டு விட்டாலும் கூட,

நம் அகத்தின் உதவியில்லாமல் - நம் மனதின் ஒத்துழைப்பு இல்லாமல் நாம் செய்யவேண்டிய புறச் செயல்களையும் சரிவரச் செய்து முடிக்க முடியாது.

புறச் செயல்கள் சம்பந்தமாக நாம் சில முடிவுகளை - எல்லைகளை அமைத்துக் கொள்ளும்போது

நமது செயல்களுக்கு வேண்டிய ஒத்துழைப்பு அனைத்தும் நம் அகத்திலிருந்தே நமக்கு கிடைத்துவிடும்.

**அதென்ன முடிவுகள் ?**

கணவன் மனைவியாக வாழ்பவர்கள், மாமியார் - மருமகள், பக்கத்து வீட்டுக்காரர்கள், சொத்து மற்றும் தொழில் பங்காளிகள்

- இப்படி பலவிதமான இணைப்புகளோடுதான் நம் புறவாழ்வு அமைந்துள்ளது.

இந்த உறவுகளிடையே முரண்பாடுகள் பல, மிகச்சாதாரணமாக ஏற்பட்டு விடுகின்றன.

அவை கடுகாகத் தோன்றி மலையாக வளர்ந்து விடுகின்றன.

இதனால் பல உறவுகள் பிரிவில் முடிகின்றன; சில உறவுகள் பகையில் கூட முடிவடைகின்றன.

புறத்தில் ஏற்படும் இத்தகைய விரிசல்களால் நம் மனதிலும் தேவையற்ற மன இறுக்கங்கள் மற்றும் போராட்டங்கள் ஏற்பட்டு விடுகின்றன.

நமது கணவன் அல்லது மனைவியுடன் முரண்பாடுகள் ஏதாவது ஏற்படும்போதோ அல்லது இதுபோல் நமது பக்கத்து வீட்டினர், நமது பங்காளி ஆகியோரிடம் முரண்பாடுகள் ஏற்படும்போதோ நாம் என்ன செய்வோம்?

அவர்கள் சம்பந்தமான எதிர்மறைச் சிந்தனைகள் நமக்கு ஏற்படுவதும், சந்தேகக் கண்களோடு நாம் அவர்களை பார்த்திடுவதுமே நடக்கும்.

விளைவு?

அவர்களுக்கும் நமக்குமுள்ள

முரண்பாடுகள்தாம் வளர்ந்து வரும்.

இந்நிலையில் முரண்பாடுகளை எதிர்கொள்வது எவ்வாறு?

கூண்டுகளையும், எல்லைகளையும் அமைத்துக்கொண்டு

ஒருவரை விட்டு ஒருவர் விலகி இருப்பதுதான் தீர்வா?

விலகி இருந்தாலும்கூட வெறுப்பெனும் நெருப்பு கனன்று கொண்டுதான் இருக்கும்.

அந்த நெருப்பு ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் எரிமலையாக வெடித்துச் சிதறும் சாத்தியங்களுடனேயே உள்ளது.

அப்படி ஒதுங்கிப் போகாமல் – விலகிப் போகாமல் நெருங்கியே இருந்தால் அதுவும் மேலும் மேலும் நெருக்கடிகளையும் பிரச்சினைகளையுமே ஏற்படுத்திவிடும்.

இந்நிலையில் இது சம்பந்தமாக நாம் என்னவிதமான தீர்வுக்குதான் வரவேண்டியுள்ளது?

**உறவுகளுடன் மட்டுமே முரண்படலாம்** என்றால் அது எப்படி ஒரு தீர்வாக அமையும்?

முரண்பாடுகளே இல்லாமல் இருப்பது மட்டும்தானே தீர்வாக அமையமுடியும்?

உறவுகளுடன் முரண்பட்டால் அது பகையாகத் தானே மாறிவிடும்?

'உறவுகளுடன் மட்டுமே முரண்படலாம்' என்பதை நாம் என்ன விதமான அணுகுமுறையில் கூறுகிறோம்?

ஓர் உதாரணத்துக்கு கணவன் மனைவியையே எடுத்துக்கொள்வோம்.

ஏதோ ஒரு கோபத்தில் ஒருவர் அடுத்தவர் மீது காயப்படுத்தும் வகையிலான வார்த்தைகளைக் கொட்டி விடுகிறார். அடுத்தவரும் பாதிக்கப்பட்டு பதிலுக்கு அத்தகைய வார்த்தைகளையே திரும்ப வழங்கி விடுகிறார்.

இருவருக்கும் மனக் காயங்கள் ஏற்படுகின்றன.

"இத்தகைய வார்த்தைகளைக் கூற இவருக்கு என்ன தகுதி இருக்கிறது?" என்பன போன்ற குதர்க்கமான சிந்தனைகள் இருவருக்குமே ஏற்படுகின்றன.

"நமது கோபத்தை இன்னும் என்ன வகையில் வெளிப்படுத்தி திருப்தி அடையலாம்?"

– என்று இருவரது உள்ளமும் அங்கலாய்க்கின்றன.

ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் இருவரும் சற்று சமாதானம் ஆகிக் கொண்டாலும்,

மனதில் ஏற்பட்ட காயங்கள் யாவும் ஆறாத இரணங்களாக இருந்துகொண்டு, புரையோடவே ஆரம்பிக்கின்றன.

இப்படி நாம் ஒவ்வொருவரும் நமது அன்றாட வாழ்வில் பலரோடு தொடர்பு கொண்டு வாழ வேண்டியவர்களாக இருக்கிறோம். ஏதோ சில காரணங்களுக்காக நாம் மற்றவர்களோடு முரண்பாடு கொள்ள நேரிடலாம்.

இதனை நாம் எவ்வாறு அணுகுவது?

**ஒரு தாய்க்கும் அவரது குழந்தைக்கும்** இடையில் அல்லது **ஒரு தந்தைக்கும் குழந்தைக்கும்** இடையில் முரண்பாடு ஏற்பட்டால் என்ன ஆகும்?

முரண்பாடுகள் அனைத்தும் ஒருவருக்கொருவர் வலியைத்தான் ஏற்படுத்தும்.

ஆனால் அவை எவையும் **பழிவாங்கும் எண்ணத்தை ஏற்படுத்தாது.**

**மனதளவில் அவர்களுக்குள் அந்த உறவு இருக்கும் வரை** அவர்கள் ஒருவருக்கொருவர் எவ்வளவுதான் முரண்பட்டாலும்,

அது முரண்பாடு ஆகாது.

எத்தனையோ சூழ்நிலையில் நாம் மற்றவர்களுடன் முரண்பட நேர்ந்திடலாம்.

அந்நிலையில், **"இவர் நமக்கு மிகவும் வேண்டியவர்"** என்ற **முடிவை முதலில் எடுத்துக் கொண்டு** அதற்குப் பிறகு நமது முரண்பாடுகளை வெளிப்படுத்தலாம்.

ஒருவர் நமக்கு வேண்டியவராகவே இருந்தாலும்கூட ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் அவர் நம்மிடம் தகாத முறையில் நடந்து கொள்ளும்போது,

அவர் மீது, ஆவேசமான எண்ணங்கள்தாம் நம்மையறியாமல் முதலில் ஏற்படும்.

ஆனால் **நாமாகச் சிந்தித்து அவர்களை நமக்கு மிகவும் வேண்டியவர்களாக முடிவு செய்து ஏற்றுக்கொண்டு** அதன் பிறகு நாம் முரண்பட்டுக் கொள்ளலாம்.

நாம் எவரிடம் முரண்பட்டாலும், அவருக்கு **அவர் நமக்கு வேண்டாதவர் அல்லது எதிரி என்ற தகுதியை வழங்கிவிட கூடாது.**

அவர் நமக்கு வேண்டியவர் – உறவினர் என்ற அணுகுமுறையோடு முரண்படும்போது அங்கு வெறுப்பு, வன்மம் ஏற்பட வாய்ப்பு இல்லை. இந்த அணுகுமுறையில் உறவுகளோடு முரண்படுவது தவறேதும் இல்லை.

நாம் விவரிக்க முயன்றிடும் அணுகுமுறை என்ன என்பதை நாம் நமக்குள் ஓர்ந்து ஆய்ந்து விளங்கிக் கொள்வோமாயின்,

நமக்கு **வேண்டாதவர் என்றோ, எதிரிகள் என்றோ,** எவரேனும் நமக்கு உளரோ?



V.A.P. சரவணன். சேலம்.
செல் : 99942 05880

# ?கேள்வி பதில்...

## மன உணர்ச்சிகளைப் புறக்கணித்து புறத்தில் செயல்படுவது எப்படி?

(மன உணர்ச்சியைப் புறக்கணித்து புறத்தில் செயல்படுவது எப்படி? என்பதை ஒரு பெரிய நிறுவனத்தில் வேலை பார்க்கும் நண்பருடன் உரையாடிய உரையாடல் இது. இதை போல் பலரும் கேள்வி கேட்பதால் அனைவருக்கும் பயன்படும் என்ற அடிப்படையில் இங்கே பதிவிட்டிருக்கிறேன்.)

**நண்பர் :**

கொஞ்ச நாட்களாக அய்யாவின் புரிதல் என் வாழ்க்கையையில் கொஞ்சம் ஆழமாக போய்க் கொண்டிருப்பதைப் போல் உணர்கிறேன்.

மனதளவில் எந்த வேலையும் இல்லை. வெளியில்தான் கவனம் செலுத்த வேண்டும் என்பதும் நன்றாக புரிகிறது. என்னுடைய கேள்வி என்னவென்றால் நான் ஒரு I.T. கம்பெனியில் வேலை பார்க்கிறேன். என்னுடைய பாஸ் என்னிடம் 'நீ சரியாக வேலை பார்க்கவில்லை' என்று வேலை நிமித்தமாக எதாவது குறை கூறிவிட்டால் எனக்குள் வருத்தமான மன உணர்ச்சி ஏற்படுகிறது. பாஸ் மேல் கோபம் ஏற்படுகிறது. என்மேல் ஒரு மாதிரி அவமான உணர்ச்சி ஏற்படுகிறது.

இருந்தாலும் நான் வெளியே என்ன வேலை பார்க்க வேண்டுமோ அதில் கவனம் செலுத்துகிறேன். இருப்பினும் எனக்குள் இருக்கிற அவமானஉணர்ச்சி மட்டும் பிடிக்கவில்லை. ஏதாவது செய்து மாற்ற வேண்டும், சரி பண்ண வேண்டும் என்று மனம் சதா போராடிக் கொண்டே இருக்கிறது. இந்த சூழ்நிலையில் நான் என்ன செய்ய வேண்டும்?

**சரவணன் :**

உங்கள் பாஸ் உங்களை திட்டியதால் வருத்தமான மன உணர்ச்சி வெளிப்படுகிறது. மன உணர்ச்சிக்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது. அது சம்பந்தமாக வெளியில்தான் அதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதை சிந்தித்து செய்ய வேண்டும். அடுத்து ஒரு சந்தர்ப்பத்தில் பாஸிடம் பேசுவதற்கு வாய்ப்பு கிடைத்தால் உங்கள் நிலையை எடுத்துக் கூறலாம். "நீங்கள் அன்று என்னை திட்டினீர்கள். ஆனால் உண்மையில் நடந்தது இதுதான்" என்று உங்கள் நிலைப்பாட்டை எடுத்து கூறலாம்.

அதே நேரம் உங்கள் வேலையில் எந்தத் தவறும் இல்லாதவாறு முடிந்தவரை பார்த்துக் கொள்ள வேண்டும். முன்பு நடந்த அனுபவத்திலிருந்து பாடம் கற்றுக் கொண்டு அடுத்து வரும் புதிய சூழ்நிலையைச் சரியாக எதிர்கொள்ள வேண்டும். பாஸ் உங்களை திட்டிய நிகழ்வு முடிந்துபோனது. "இப்படி திட்டி விட்டாரே... திட்டி விட்டாரே..." என்று அதனோடு போராடுவது தேவையற்றது. அதனை முடிந்துபோன எண்ணமாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

நாம் வெளி உலகில் வெற்றி பெற வேண்டும் என்றால் அதற்கு எப்படி செயல்பட வேண்டுமோ அப்படி செயல்பட வேண்டும்.

**நண்பர்:**

ஆனால் எனக்குள் இருக்கிற மன உணர்ச்சிகள் எனக்கு பிடிக்கவில்லை. அது தான் என்னை சரியாக வேலை செய்ய விடாமல் தடுக்கிறது. இந்த பிடிக்காத மன உணர்ச்சிக்கு நான் என்ன செய்வது?

பாஸ், "நீ நன்றாக வேலை பார்க்கிறாய்" என்று கூறும்போது ஒரு நல்ல மனம் உணர்ச்சி ஏற்படுகிறது. அந்த மன உணர்விலேயே இருந்து கொண்டே இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். இது சரியா?

**சரவணன் :**

உங்களுக்கு பிடித்த மன உணர்ச்சிகள் மட்டும்தான் வரவேண்டும் என்று நினைக்கிறீர்கள். அப்படி ஏற்படுவதற்கு வாய்ப்பே இல்லை. மனதைப் பொறுத்த வரை நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப ஏதோ ஒரு மன உணர்ச்சியை வெளிப்படுத்திக் கொண்டுதான் இருக்கும். மன உணர்ச்சியில் நல்லது - கெட்டது என்று எதுவும் கிடையாது. புறச் செயலைப் பொறுத்தே நல்லது, கெட்டது என்று தரம் பிரிக்கப்படுகிறது. வெளிப்பட்ட மன உணர்ச்சிகளில் நமக்கு எந்த வேலையும் இல்லை. நமக்கு ஏற்படும் மன உணர்ச்சியை தூண்டுகோலாக பயன்படுத்திக் கொண்டு புறத்தில் தேவையான செயல்களை செய்து கொள்ளலாம்.

**நண்பர் :**

எந்தவிதமான மன உணர்ச்சிகளும்கூட நமக்கு ஏற்படலாமா?

**சரவணன் :**

ஏற்படலாம். நமது அகத்தைப் பொருத்தவரை உணர்ச்சி சம்பந்தமாக ஒன்றுமே செய்வதற்கு இல்லை என்பதைப் புரிந்து கொள்வது தான் மிக முக்கியமானதாகும். முதல்கட்டமாக மன உணர்ச்சி சம்பந்தமாக ஒன்றும் செய்வதற்கில்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும். வெளியில் செயல்படுவது என்பது கூட இரண்டாம் பட்சமானதுதான். செயல் செய்யலாம், செய்யாமல் கூட போகலாம். இது புறத் தேவையை பொறுத்தது.

**நண்பர் :**

எல்லோருக்கும் ஒரே மாதிரியான மனஉணர்ச்சிகள் ஏற்படுவது இல்லையே. அது ஏன்?

**சரவணன் :**

ஒவ்வொருவருக்கும் ஓர் இயல்பு இருக்கிறது. அதற்கு ஏற்ற மன உணர்ச்சிகள் தாம் அவர்களிடம் வெளிப்படுகிறது.

**நண்பர் :**

நான் வசதிபடைத்த யாரையாவது பார்த்து பேச வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால் எனக்குள் தாழ்வு மனப்பான்மை ஏற்படுகிறது. என்னை அவர்கள் எப்படி பார்ப்பார்கள் என்ற தாழ்வு உணர்ச்சி எனக்குள் ஏற்படுகிறது. என்னுடைய மற்ற நண்பர்களுக்கு இதுபோல் ஏற்படுவதில்லை. எனக்கு மட்டும் ஏன் இப்படி ஏற்படுகிறது?

**சரவணன் :**

உங்களுக்கு ஒரு மாதிரி மன உணர்ச்சியை வெளிப்படுகிறது. வேறு ஒருவருக்கு வேறுவிதமான மன உணர்ச்சி வெளிப்படுகிறது. நமக்கு ஏன் இப்படி மன உணர்ச்சி வருகிறது என்று கேள்வி கேட்பதற்கு நமக்கு எந்த வாய்ப்பும் கிடையாது. வந்த மனஉணர்ச்சிக்கு நாம் ஒன்றும் பண்ண முடியாது என்பதை புரிந்து கொள்வது தான் புரிதலாகும். நமக்கு வரும் மன உணர்ச்சி சம்பந்தமாக நாம் எதாவது செய்ய முடியுமா? முடியாதா?

**நண்பர் :**

எதுவும் செய்ய முடியாது. எதுவும் செய்வதற்கு இல்லை என்பது புரிந்து விட்டது. ஆனால் பொருந்தாத மன உணர்ச்சிகள் (Unpleasant Feelings) பிடிக்கவில்லை.

**சரவணன்:**

நமக்கு பிடிக்காத மன உணர்ச்சியும்கூட (Unpleasant Feeling) மன உணர்ச்சி தானே. மன உணர்ச்சிக்கு முக்கியத்துவம் தரத் தேவையில்லை என்று சொல்லிக்கொண்டு நீங்கள் முழுவதுமாக மன உணர்ச்சிக்குதான் முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதற்கு நாம் ஒன்றுமே செய்ய முடியாது. உங்கள் பாஸ் உங்களை திட்டியதால் உங்களுக்கு பொருந்தாத ஒரு மன உணர்வு இருந்து கொண்டே இருக்கிறது. இதற்கு நாம் என்ன பண்ண முடியும். அதையும் ஒரு முடிந்து போன ஓர் எண்ணமாக எடுத்துக்கொண்டு எப்படி வேண்டுமானாலும் அந்த மன உணர்ச்சி இருந்துவிட்டு போகட்டும் என்று சும்மா இருக்க வேண்டியது தான். நாம் பொருந்தாத மனஉணர்ச்சியுடன் இரவு படுத்து விடுகிறோம். காலை அந்த உணர்ச்சி அப்படியே இருக்கிறதா? இல்லை மாறி விடுகிறதா?

**நண்பர்:**

மாறிவிடுகிறது. எப்படி மாறிவிடுகிறது என்பது புரியவில்லை.

**சரவணன்:**

நமக்குத் நேரடியாக தெரிந்து எந்த மன உணர்ச்சியும் மாறுவதற்கு வாய்ப்பே இல்லை. நாம் அதன் மீது வைத்திருக்கும் கவனத்திலிருந்து விடுபடுவதன் மூலமாகவே தாமாகவே மாற்றமடைகிறது.

எப்படி மாறிவிடுகிறது என்றால், எந்த மன உணர்ச்சியும் தொடர்ந்து நம்மிடம் தங்குவதற்கு வாய்ப்பே இல்லை. மன உணர்ச்சியின் ஆயுள் அரை வினாடி நேரம் மட்டுமே. மன உணர்ச்சியை அப்புறப்படுத்த போராடுவதால் மட்டுமே அது உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறது. போராட்டத்தைக் கைவிட்ட நிலையில்– கவனத்தில் இருந்து விடுபட்ட நிலையில் மாற்றம் என்பது தாமாக நிகழ்கிறது. இப்போது இது உங்களுக்கு புரிகிறதா?

**நண்பர் :**

நன்றாக புரிந்து விட்டது. எந்த உணர்ச்சியும் நிரந்தரமானது கிடையாது.

இது எனக்கு எப்படி புரிகிறது என்றால், இயற்கையில் வெயில் அடிக்கிறது, மழை பொழிகிறது அதை நம்மால் தடுத்து நிறுத்தவும் முடியாது. கொண்டு வரவும் முடியாது. அது மாதிரி தான் நம் மனதிற்குள் ஏற்படும் மன உணர்ச்சிகளும். நாம் எதுவும் செய்ய முடியாது அப்படித்தானே? மன உணர்ச்சியை மாற்றுவதற்காக மனதிடம் எத்தனை முறை முயற்சி செய்தாலும் எந்த மாற்றமும் ஏற்படப் போவதில்லை. அப்படித்தானே?

**சரவணன்:**

ஆமாம்.

மனதில் மாற்றம் என்பது தாமாக நிகழ்வது. நாம்தான் 'மன உணர்ச்சி பிடிக்கவில்லை' என்று விடாமல் பிடித்துக் கொண்டு போராடி விடுகிறோம்.

**நண்பர்:**

ஒரு பிரச்சனையின் போது நமக்குள் மனஉணர்ச்சிகள் வந்து கொண்டேதான் இருக்கிறது. வெளியில் தீர்வு கிடைத்ததும் பிறகு உள்ளே தானாகவே அமைதியும் கிடைத்துவிடுகிறது. வெளியில் தீர்வு கிடைக்காத மன பிரச்சினைக்கு என்ன செய்வது?

**சரவணன்:**

ஆமாம்.

வெளியில் சில பிரச்சனைகளுக்கு தீர்வு கூட கிடைக்காமல் போய்விடலாம். அதற்கு நாம் என்ன செய்யமுடியும்.

ஒரு பொருள் முற்றிலுமாக அழிந்து சேதமடைந்து விட்டதென்றால் இனி அது கிடைப்பதற்கு எந்த வாய்ப்பும் இல்லை. இது போன்ற சூழ்நிலைகளில் ஏற்படும் மன உணர்ச்சிக்கு நாம் என்ன பண்ண முடியும்?

செய்வதற்கு எதுவும் வழி இல்லை என்பதை ஏற்றுக் கொள்வது தவிர வேறு எந்த வழியும் இல்லை. ஏற்றுக்கொள்ளும்போது மட்டுமே மாற்றம் என்பது நிகழும். அப்படித்தான் எவ்வளவு டென்ஷன் இருந்தாலும்கூட மன உணர்ச்சி சம்பந்தமாக நாம் ஒன்றும் செய்ய முடியாது என்பதை புரிந்து கொண்டு விடும் போது மன உணர்ச்சி தாமாகவே மாறிவிடுகிறது.

தீர்க்கமுடியாத புறப் பிரச்சனைகள் உண்டு. தீர்க்க முடியாத அகப் பிரச்சனைகள் என்று எதுவுமே இல்லை. மொத்தத்தில் அந்த உணர்ச்சி தாமாகவே மாறி போய்விடுகிறது இல்லையா?

**நண்பர்:**

நிச்சயமாக மாறிவிடுகிறது.

இந்த புரிதலுக்கு முன்பு அந்த உணர்ச்சியை பிடித்துக்கொண்டு போராடிக்கொண்டு இருந்தோம். இந்த அளவுக்கு நாம் மாறியது கூட பெரிய மாற்றம் தான் என்று நினைக்கின்றேன்.

**சரவணன்:**

நிச்சயமாக.

எந்த மன உணர்ச்சி வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும்.

மன உணர்ச்சி சம்பந்தமாக நாம் எதுவும் செய்வதற்கில்லை என்பதை நமக்குள் கண்டுபிடித்துக் கொள்ள வேண்டும் அவ்வளவுதான்.

**நண்பர்:**

மிகவும் சரி.

இப்படி தொடர்ந்து புரிதலில் பயணித்துக் கொண்டு இருந்தால் நமக்குள்ள என்ன மாதிரியான மனமாற்றம் ஏற்படும்?

**சரவணன்:**

நாம் பிடித்துக் கொண்டிருக்கிற மன உணர்ச்சிகளின் பிடியில் இருந்து வெகு விரைவாக விடுபடுவோம். மன உணர்ச்சிகள் இருந்திடவும் மறைந்திடவும் முழு சுதந்திரம் அளித்து விடுவோம். மன உணர்ச்சி சம்பந்தமான ஒட்டுமொத்த வேலையும் முடிந்துவிடும். ஆனால் **என்ன மனமாற்றம் ஏற்படும் என்ற எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் இருப்பதே சரியானதாகும். ஏனெனில் எதிர்பார்ப்புதான் பிரச்சினையை கொண்டு விடுகிறது.**

**நண்பர்:**

நன்றாக புரிகிறது. எனக்கு கார் ஓட்டும்போது விபத்து ஏற்பட்டு விடுமோ என்ற பயம் இருந்தது. நீங்கள், உங்களுக்கு கார் ஓட்டும்போது ஏற்பட்ட பயம் பற்றிய அனுபவத்தை கூறுவதையெல்லாம் கேட்டபிறகு கார் டிரைவிங்கின்போது விபத்து ஏற்பட்டுவிடுமோ என்ற பயத்திற்கு அளித்த கவனத்தை கார் ஓட்டும் செயல் பக்கம் திருப்பினேன். இப்போது என்னால் நன்றாக டிரைவ் பண்ண முடிகிறது. அந்த பய உணர்வு சுத்தமாக மறைந்தே விட்டது. இதை நான் அனுபவமாகவே உணர்ந்துவிட்டேன். அதன்பிறகுதான் இந்த புரிதல் வேலை செய்கிறது என்பதையே நான் நம்பத் தொடங்கினேன்.

**சரவணன்:**

நீங்கள் ஆக்சிடெண்ட் பயத்துடன் இருந்தீர்கள் என்பதுகூட இப்பொழுது மறந்து போயிருக்கும் இல்லையா?

**நண்பர்:**

ஆமாம். மறந்து போய்விட்டது. பழையபடி நான் எப்படி இருந்தேன் என்று நினைத்து கூட பார்க்க முடியவில்லை.

**சரவணன்:**

இதுவே மிகப் பெரிய மாற்றம் தானே. இதைப்போல மற்ற விஷயங்களும் தானாகவே மாறிவிடும். ஒட்டுமொத்தமாக அகத்தில் எந்த வேலையும் இல்லை என்று முடித்துக் கொள்கிறோம். மனம் வெளிப்படுத்தும் மன உணர்ச்சிகளை நிர்வாகம் செய்யாமல் புறச் செயலுக்கு தேவையென்றால் மன உணர்ச்சியை பயன்படுத்தி கொள்கின்றோம்.

**நண்பர்:**

நன்றாக புரிகிறது. இயற்கையில் எல்லாமே தோன்றி மறைவதுமாகத்தான் இருக்கிறது. நாம்தான் தெரியாமல் பிடித்துக்கொண்டு போராடுகிறோம்.

அப்படித்தானே?

**சரவணன்:**

ஆமாம். இயற்கையில் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே இருக்கிறது. அப்படித்தான் மன உணர்ச்சிகளும் தோன்றி மறைந்து கொண்டே இருக்கின்றன. நாம்தான் இந்த புரிதல் இல்லாமல் இத்தனை நாள் மன உணர்ச்சியை பிடித்துக்கொண்டு போராடிக்கொண்டு இருந்தோம். இப்பொழுது புரிந்து கொண்டோம் இனி விடுதலையுடன் வாழ்வோம்.

**நண்பர்:**

மிகவும் நன்றாக புரிந்து கொண்டேன் ஐயா. நன்றி.



# ஜென் கதை

## ”என்ன செய்வீர்கள் ?”

ஒரு ஜென் குரு இருந்தார்.

அவர் தம் மூன்று சீடர்களையும் அழைத்தார்.

தன் சீடர்களின் தகுதியை உணர்ந்து கொள்ள, ”நான் உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்கு பதில் சொல்ல வேண்டும்” என்றார்.

”குருவே, என்ன கேள்வி வேண்டுமானாலும் கேளுங்கள். பதில் சொல்கிறோம்” என்றார்கள் அவர்கள்.

”இன்னும் ஒரு மணி நேரம் தான் நீங்கள் உயிருடன் இருக்கப் போகிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அந்த ஒரு மணி நேரத்தில் என்ன செய்வீர்கள்?” என்று கேட்டார்.

முதலாம் சீடன் ”இறைவழிபாட்டில் மூழ்கி இறைவனோடு என்னை ஐக்கியப் படுத்திக் கொள்வேன்” என்றான்.

”தியானத்தில் ஆழ்ந்து ஆழ்ந்து சென்று ஏக நிலையுடன் இணைந்து விடுவேன்” என்றான் இரண்டாம் சீடன்.

”என்னை ஈன்றெடுத்த பெற்றோர்களை கவனிப்பதில் செலவிடுவேன்” என்றான் மூன்றாம் சீடன்.

ஞானி கேட்டார், ”நீங்கள் ஒவ்வொருவரும் இந்தப் பதிலை சொல்வதற்கான காரணம் என்ன?” என்று கேட்டார்.

அவர்கள் ”இன்னும் எப்படியும் ஒரு மணி நேரம்தான் எங்களது வாழ்வு இருக்கிறது என்றால் ஒவ்வொரு வினாடியும் எவ்வளவு முக்கியமானது. அதை உணர்ந்ததால் நாங்கள் இப்படி கூறினோம்” என்றார்கள்.

”நாங்கள் கூறியதில் ஏதேனும் பிழை இருக்கிறதா?” என்றனர்.

”எந்தப் பிழையும் இல்லை மிகவும் நல்லது நீங்கள் புனிதமானதை சொன்னீர்கள்” என்று பாராட்டினார் ஞானி.

சீடனில் ஒருவன் ஞானியிடம், ”குருவே நீங்களும் இன்னும் ஒரு மணி நேரம் தான் வாழப்போகிறீர்கள் என்றால் என்ன செய்வீர்கள்?” என்று ஆவலுடன் கேட்டேன்.

குரு சொன்னார், ”இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறேனோ அதைத்தான் செய்துகொண்டிருப்பேன். தனியாக செய்வதற்கு என்று எதுவும் இல்லை. என்னிடம் எந்த மாற்றமும் இருக்காது” என்றார் குரு.

ஏனென்று கேட்டார்கள் சீடர்கள்.

”வாழ்க்கையின் எல்லா வினாடிகளும் எனக்கு முக்கியத்துவம் வாய்ந்ததே – புனிதமானதே” என்றார் ஞானி.

சீடர்களில் ஒருவன் ”உங்களை போல் எங்களுக்கு இந்தப் பதில் தோன்றவில்லையே அது ஏன்?” என்று கேட்டான்.

”நீங்கள் இப்போது செய்து கொண்டிருப்பதைக் காட்டிலும் இன்னும் ஏதோ ஒன்றை சிறப்பாக செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் செய்து கொண்டிருப்பதில் முழுமை இல்லை. அதனால்தான் இருப்பதைக் காட்டிலும் ஏதோ ஒன்றை புதியதாக செய்ய விரும்புகிறீர்கள்.”

”அப்படியெனில் எங்களுக்கு இன்னும் புரியவில்லை அப்படித்தானே, நாங்கள் எப்படித்தான் புரிந்து கொள்வது?” என்றான் ஒரு சீடன்.

இருப்பதை மாற்ற வேண்டும் என்று முயற்சிப்பதுதான் பிரச்சினையை கொண்டு வருகிறது. விடுதலை என்பது அடையவேண்டிய ஒன்றல்ல. இருப்பதோடு முரண்படாமல் இருத்தல், அக விடுதலையோடு செய்யும் செயல் அனைத்தும் முழுமையாக இருக்கும்.

”நீங்கள் எப்போதும் இருப்பது மலை உச்சியில் தான். மலை உச்சியிலிருந்து கொண்டு மீண்டும் மலை உச்சியை அடைய முடியாது.” என்றார் ஞானி

சீடர்கள் அக விழிப்படைந்தவர்கள் புறத்தில் விழிப்புணர்வோடு செயல்பட தொடங்கினார்.

# ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாததால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு நிறைவடைந்துள்ளது.

ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா 25-2-2021 வியாழக்கிழமை அன்று காலை 11 மணிக்கு சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் திருக்கரங்களால் திறந்து வைக்கப்பட்டது.

இதனைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 'இந்த காட்டேஜ் எதற்கு, அதன் தேவை என்ன, நம் நோக்கம் என்ன' என்பதைப் பற்றி விளக்கமாக ஒரு உரை நிகழ்த்தினார்.

இவ்விழா நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப விழாவாக 50 அன்பர்களுடன் சிறப்பாக நடந்தேறியது.

இவ்விழாவிற்கு முதல் நாளே புதன்கிழமை அன்று ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள் தங்கள் குடும்பத்துடன் தம்பதிகளாக வந்து ஒன்றுகூடி தங்கி, உணவருந்தி ஐயாவுடன் உரையாடி மகிழ்ந்திருந்து விழாவை கோலாகலமாக கொண்டாடினர்.

இத் திறப்பு விழா ஒரு குடும்ப நிகழ்ச்சியில் எப்படி இருக்குமோ அப்படியே இருந்தது.

அனைத்து ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்களையும் ஸ்ரீ பகவத் மிஷன் கௌரவித்து சிறப்பித்தது.

இதுவரை 8 பெரிய அறைகளுக்கான



உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்ததைத் தொடர்ந்து 5 சிறிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள்.

இன்னும் மூன்று உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளனர்.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினரில் ஒருவருக்கு சேர்ந்து விடும்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

**இன்னும் 3 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாகத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.**

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டி தொடரட்டும்...**

**அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்.**

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

Cell : 99942 05880, 97891 65555.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் பவனில் கோவை மற்றும் சென்னை அன்பர்கள் ஐயாவுடன்.





கோவை அன்பர் குடும்பத்துடன்



ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன் ஜீவமணி மற்றும் சரவணன்.



நாகர்கோவில் அன்பர்களுடன் ஐயா.



ஐயாவுடன் சென்னை அன்பர் குடும்பத்துடன்.

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் பாதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.

2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் – ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினை எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழுக் கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/– வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் இதனை குறைந்தபட்சம் இரண்டு வருடங்களுக்கு மட்டுமாவது வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்

**ஸ்ரீ பகவத்,**

**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**